29th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The amounts are yet to be disbursed and it is likely that the entire amounts will be disbursed before 31st March 1959.

(*b*) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : விவசாய இலாகாவில் போதிய அளவில் டிராக்டர்கள் இல்லாததால், பல விவசாயிகள் தனிப் பட்டவர்களுக்கு பணம் கொடுத்து அவர்களுடைய டிராக்டர்களை வாங்கி உபயோகிக்கிறார்கள். அப்படி தனிப்பட்டவர்களிடமிருந்து டிராக்டர்களை அவர்கள் வாடகைக்கு வாங்கும்போது அதிகக் கட்டணம் கொடுக்க வேண்டி யிருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானால், விவ சாயிகளுக்கு குறைந்த கட்டணத்தில் டிராக்டர்கள் வாடகைக்குக் கிடைப் பதற்கு வகை செய்வதற்காக, விவசாய இலாகாவில் டிராக்டர்களை அதிகரிக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : டிராக்டர்களை விவ சாயிகளுக்கு வாடகைக்குக் கொடுக்கும் திட்டம் மாற்றியமைக்கப்படுவதற் காகப் பரிசீலிக்கப்பட்டுவருகிறது என்று நான் ஏற்கனவே சொன்னேன். விவசாயிகளுக்கு டிராக்டர் வாங்கிக் கொள்வதற்குக் கடன் கொடுப்பதே சிறந்த முறையாகத் தோன்றுகிறது. சர்க்காரே டிராக்டர்களை வாங்கி வைத்துக்கொண்டு விவசாயிகளுக்கு உபயோகத்திற்குக் கொடுத்துவந்தால், அவை கெட்டுப் போகின்றன. எனவே, விவசாயிகள் தங்கள் சொந்தப் பொறுப்பில் டிராக்டர்களை வாங்கிக்கொள்வதை ஆதரிக்க வேண்டும் என்பதுதான் சர்க்காரின் எண்ணம்.

*Muniyappa Gownder Motor Service*

* 622 *Q.*—SRI N. MARUDACHALAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether a complaint was lodged by the Coimbatore District Motor Workers' Union with the Regional Transport Officer, Coimbatore, regarding the exorbitant charges collected by the B. Muniappa Gownder Motor Service;

(*b*) if so, the action taken thereon; and

(*c*) the excess trips run by the said service during February and March 1958?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) 244 (This includes also the trips performed as contract carriages in various routes.)

SRI N. MARUDACHALAM : பஸ் முதலாளிகள் பல பிரயாணிகளுக்குக் கொடுக்கும் டிக்கெட்டுகள் ஒருவிதமாக இருக்கின்றன. அதாவது, வருமான வரியிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக—அரசாங்கத்தை ஏமாற்றுவதற்காக—அவர்கள் பிரயாணிகளுக்கு ஒரு விதமான டிக்கெட்டு களைக் கொடுக்கிறார்கள். ஆகையால் அவர்களுடைய பஸ் டிக்கெட்டுகளில் அரசாங்க முத்திரையைப் போடுவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் கூறியது போன்ற புகாரை, இதுவரையிலும் நான் கேள்விப்பட்டதில்லை ; யாரும் கேள்விப்பட்டிருக்க முடியாது. அந்த மாதிரியான காரியங்கள் நடந் தால், அதை எனக்கு தனிப்பட்ட முறையில் எழுத்து மூலம் தெரிவித்தால் அதை கவனிக்கிறேன்.